3rd March 1958] [Sri M. Ethirajalu]

அடுத்தபடியாக, கிராமங்களில் கால்நடைகளுக்கு ஏதாவது கோமாரி போன்ற நோய் வந்தால், அவைகளைக் கிராம மக்கள் மருத்துவசாலை களுக்குக் கொண்டுபோவது கிடையாது. அவர்கள் காளியம்மனுக்கும் மாரியம்மனுக்கும் வேண்டிக்கொண்டு வியாதி போய்விடும் என்று நம்பு கிறார்கள். இந்த நிலைமை இன்று வரை நீடித்து வருகிறது. இது மாறியாக வேண்டும். அதற்கான நடவடிக்கையை சர்க்கார் எடுக்க வேண்டும். மாட்டு நோய்கள் காலண்டர் ஒன்றை சர்க்கார் தயாரிக்க வேண்டும். அதாவது, கால்நடைகளுக்கு எந்த எந்த மாதங்களில் எந்த எந்த நோய்கள் வரும் என்பதையும் அதற்கு மருந்து என்ன என்பதையும் அதில் குறிப்பிட வேண்டும். அந்தக் காலண்டரின் பிரதிகளை கிராமங் களில் ஒவ்வொரு வீட்டிற்கும் கொடுத்தால், கிராமவாசிகள் கால்நடைகள் அபிவிருத்திக்கு பெருமுயற்சி எடுப்பார்கள். நாம் இப்போது செலவழிக் கும் பணத் தொகையைக் குறைக்கலாம் ; இவ்வளவு பணம் செலவழிக்க வேண்டிய அவசியம் இருக்காது. அப்படிச் செய்தால் கிராம மக்கள் தாங்களே கால்நடைகளை நன்ருகப் பராமரித்து, அவைகளை அபிவிருத்தி செய்வதில் அக்கறை எடுத்துக்கொள்வார்கள்.

அடுத்தபடியாக, கோழிப் பண்ணைகளையும் ஆட்டுப் பண்ணைகளையும் வளர்ப்பதற்காக இந்த வரவு செலவுத் திட்டத்தில் பணம் ஒதுக்கப்பட் டிருக்கிறது. இது குறித்து நான் சந்தோஷப்படுகிறேன். கோழிப் பண்ணை நடத்துவதிலும், ஆட்டுப் பண்ணையையும் விதவைகளுக்குக் கொடுத்து உதவ வேண்டும். அவர்களுக்கு வேண்டிய கோழிகளும் ஆடுகளும் கிடைப் பதற்கு வகை செய்தால், எவ்வித உதவியும் இல்லாத விதவைகள் வாழ்க்கைத் தரம் உயரும். ஆகவே இது சம்பந்தப்பட்ட இனத்திற்கு பணம் ஒதுக்கியிருப்பதற்காக சர்க்காரை நான் பாராட்டுகிறேன்.

அடுத்தபடியாக, காடுகளை வளர்ப்பதற்கு 29 லட்ச ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது. இந்தத் திட்டத்தின்படி கடலோர மாவட்டங்களில் முந்திரி, சவுக்கு போன்றவைகள் பயிர் செய்யப்படும் என்பதாகக் குறிப்பிட்டிருக்கிறது. மண் வளப் பாதுகாப்பிற்காக ரூ. 17 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நிச்சயமாக இவை எல்லாம் நாட்டு மக்களுக்கு மிகவும் பயனளிக்கும் என்று நம்புகிறேன். 5-10 p.m.

அடுத்தபடியாக, கைத்தொழில்களின் அபிவிருத்திக்காக அரசாங்கத் தார் ஏராளமாகப் பணம் ஒதுக்கியிருக்கிறார்கள். ரேயான் பட்டுத் தொழிற் சாலை, நெய்வேலியிலுள்ள பெரிய தொழிற்சாலைகள், திருநெல்வேலியி லுள்ள சோடா பாக்டரி ஆகிய பெரிய தொழிற்சாலைகளுக்கு சர்க்கார் பண உதவியளிக்கும் அதே சமயத்தில், சிறு கைத்தொழில்களை ஊக்குவிப்ப தற்காகவும் வரவு செலவுத் திட்டத்தில் ரூ. 25 லட்சம் ஒதுக்கியிருக் கிறார்கள். இதனால் கிராமங்களிலுள்ள சிறு தொழிலாளர்கள் முன்னேற முடியும். இந்தச் சிறு கைத்தொழிற்சாலைகளை நகரங்களில் அமைக்கக் கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன். கூடிய வரை மேஜர் பஞ்சா யத்துக்களிலாவது இவைகளை அமைக்கவேண்டும். கிராமங்களில் சிறு கைத்தொழில்களை ஆரம்பித்து அபிவிருத்தி செய்தால், கிராம மக்கள் கைத்தொழில்களில் ஈடுபட்டு நல்ல வருவாயை அடைவார்கள் என்றும் அரசாங்கத்தார் இந்த இனத்தில் செலவழிக்கும் பணம் நாம் எதிர் பார்க்கும் பலனை அளிக்கும் என்றும் சொல்லிக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கைத்தறித் தொழிலாளிகள் கூட்டுறவுச் சங்கங்களில் சேருவதற்கும், அவர்களுக்கு வேண்டிய வீடுகளைக் கட்டிக்கொள்வதற்கும், அவர்களுடைய தொழிலுக்குத் தேவையான எல்லா சாமான்களையும் வாங்கிக்கொள்வதற்கும், கைத்தறி நெசவாளர்களுக்கு அரசாங்கத்தார் ஏராளமான பண உதவியளித்து வருகிறார்கள். இது நம் நாட்டு மக்க ளுக்கு மட்டுமின்றி வெளி நாட்டு மக்களுக்கும் தெரியும். ஏனென்றால், வெளி நாடுகளில் கைத்தறித் துணிகள் விற்கப்படுகின்றன. நம் நாட்டுக் கைத்தறித் துணிகளை விற்பதற்காக வெளிநாடுகளில் 'ஷோ ரூம்' கள் வைத்து நமது கைத்தறி வியாபாரத்தைப் பரப்பி வருகிறோம். மேலும் இவர்களுக்கு சென்ற ஆண்டில் திருநெல்வேலியில் ஒரு நூற்பு ஆலை

அமைக்கத் திட்டமிட்டோம். அது சீக்கிரத்தில் உற்பத்தியைத் தொடங்கப் போகிறது. இந்த வருஷத்தில் 12,000 கதிர்கள் கொண்ட இன்னொரு நூற்பு ஆலையை ஸ்ரீவில்லிபுத்தூரில் தொடங்குவதற்கு சர்க்கார் உத்தேசித்திருக்கிறார்கள். கைத்தறி நெசவாளர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கான எல்லாவற்றையும் செய்துவருவதற்காக சர்க்காரைப் பாராட்ட நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

அடுத்தபடியாக, வீடுகள் கட்டும் திட்டத்தின் கீழ் தொழிலாளர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்காகப் பணம் ஒதுக்கப்பட்டுள்ளது. வீடுகள் கட்டும் திட்டத்தின் கீழ் இந்த வரவு செலவுத் திட்டத்தில், கூட்டுறவுச் சங்கங்களுக்கு 15 லட்ச ரூபாயும் நகர அபிவிருத்தி டிரஸ்டுக்கு 17 லட்ச ரூபாயும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டத்தின் கீழ், சென்ற இரண்டு-மூன்று ஆண்டுகளில் சென்னையில் பாட்டாளி மக்களான தொழிலாளர்களுக்கு எந்த வீடும் கட்டிக் கொடுக்கப்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். இனிமேலாவது நகர அபிவிருத்தி டிரஸ்ட்யார், யார் தொழிலாளர்கள் என்று கவனித்து, அன்றாட வாழ்க்கையில் மக்களுக்கு உதவி செய்யும் பாட்டாளித் தொழிலாளர்களுக்கு வீடுகள் கிடைக்கும் வகையில் இந்தத் திட்டத்தை இந்த வருஷத்திலாவது நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இத்திட்டத்தின் கீழ் சென்னை நகரில் 20 சேரிகள் தேர்ந்தெடுத்து அவைகள் ஒழிக்கப்பட்டு 4,000 ஹரிஜனக் குடும்பங்களுக்கு வீடு கட்டிக் கொடுத்து வாழ வகை செய்யப்படும் என்று குறிப்பிட்டிருப்பதைப் பார்த்து நான் சந்தோஷப்படுகிறேன். இப்படிப்பட்ட திட்டத்தை மற்ற ஜில்லாக்களிலும் நிறைவேற்றக் கூடாதா என்று கேட்க விரும்புகிறேன். சென்னை நகரிலுள்ள சேரிவாழ் மக்களின் நிலைமையை விட மிக மோசமான நிலைமையில் மற்ற ஜில்லாக்களிலுள்ள சேரிவாழ் மக்கள் இருக்கிறார்கள் என்று கவர்னர் அவர்களுடைய பிரசங்கத்தின்பேரில் நடந்த விவாதத்தின்போதுகூட நான் சொல்லியிருக்கிறேன். மூன்று செண்ட் நிலம்கூட இன்று வரை வீடு கட்டி வாழ கிடைக்கவில்லை. இந்த நிலையில், அவர்களுக்கு உடனடியாக வீடு கட்டிக்கொடுக்க முடியாவிட்டாலும் வீடில்லாமல் தவிக்கும்படி அவர்களை சர்க்கார் விட்டுவிடக் கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன். அதற்கு அவசியமான உத்தரவை ஜில்லாக் கலெக்டர்களுக்குப் போட வேண்டுமென்றும் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கல்வித் துறையில் சர்க்கார் 1956–57-ம் ஆண்டில் 10 கோடியே 60 லட்ச ரூபாய் செலவு செய்தார்கள். இந்த வருஷத்திற்கு ஒதுக்கியுள்ள பணம் ரூ. 11 கோடியே 47 லட்சம். ஆரம்பக் கல்வித் திட்டத்திற்காக 1957–58-ல் 6 கோடியே 54 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டது. வரும் ஆண்டில் ஆரம்பக் கல்விக்காக 6 கோடியே 59 லட்சம் ரூபாய் செலவழிக்கப்படும் என்று வரவு செலவுத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருப்பது கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன்.

எல்லா மக்களுக்கும் ஆரம்பக் கல்வி அளிப்பதற்காக, 500 பேர் ஜனத்தொகையுள்ள ஒவ்வொரு சிறிய கிராமத்திலும் ஆரம்பப் பள்ளிக்கூடம் இருக்க வேண்டும் என்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. ஆனால் இப்போது கிராமங்களிலுள்ள ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் நல்ல முறையில் நடக்கவில்லை. கிராமங்களிலுள்ள பள்ளிக்கூடங்களில், மாணவர்கள் உட்காருவதற்கு போதிய பலகைகள் இல்லை. கிராமப் பள்ளிக்கூடங்கள் இராக் காலங்களில் மாட்டுத் தொழுவங்களாக மாறிவிடுகின்றன. கிராமப் பள்ளிக்கூடங்கள் நன்றாக நடந்தால்தான், அவைகளில் படிக்கும் பிள்ளைகள் நன்றாகப் படித்துத் தேர்ச்சி பெற்று நகரங்களிலுள்ள உயர்தரப் பள்ளிகளுக்கு வர முடியும். மேலும், கிராமங்களில் இருக்கும் குழந்தைகளுக்கு இராப் பள்ளிக்கூடங்களை நடத்த வேண்டும். அங்கே இராப் பள்ளிக்கூடங்களை ஆரம்பித்து நடத்தாவிட்டால், ஆரம்பக் கல்வித் திட்டத்தில் நாம் வெற்றி காண முடியாது என்று சொல்லிக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஹரிஜனங்கள், பின்தங்கிய வகுப்பினர் ஆகியோருடைய நலனுக்காக சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டுக்கு 40 லட்சம் ரூபாய் அதிகமாக ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த வரவுச் செலவுத் திட்டத்தில்

3rd March 1958] [Sri M. Ethirajulu]

இதற்காக 233 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். 15,000 மாணவர்களுக்கு உதவிச் சம்பளம் வழங்க 28 லட்ச ரூபாயும், 12,000 மாணவர்கள் விடுதிகளில் தங்கி படிக்க மானியமாக 22 லட்ச ரூபாயும், ஹரிஜனப் பள்ளியில் படிக்கும் மாணவர்களுக்கு மத்தியான உணவுக்காக 27 லட்ச ரூபாயும், 5,000 வீடுகள் கட்டுவதற்கு மானியமாக 27 லட்ச ரூபாயும், 5,800 ஜோடி காளை மாடுகள் வாங்குவதற்கு மானியமாக 18 லட்ச ரூபாயும், 175 கிணறுகளுக்கு ரூ. 5 லட்சமும், சிறு குடிசை தொழிலுக்கு ரூ. 9 லட்சமும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதை எல்லாம் பார்க்கும்பொழுது இன்னும் பின்தங்கிய வகுப்பினர்களைச் சேர்ந்த மாணவர்களுக்கு சலுகைகளை அளிக்க அதிகமான தொகை ஒதுக்க வேண்டுமென்று நான் அரசாங்கத்தை வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். இது மிகவும் குறைவானதுதான். எத்தனையோ மாண வர்கள் தங்களுடைய ஊர், பெயர், இனம் மூன்றையும் மாற்றிக் கொடுத்து தவறான வழியிலே இந்தப் பின்தங்கிய மாணவர்களுக்குக் கிடைக்கக்கூடிய சம்பளச் சலுகையைப் பெற்றுவருகிறார்கள் என்பதை நான் அரசாங்கத்திடம் பல தடவை வற்புறுத்திச் சொல்லியிருக்கிறேன். இந்தத் தவறு எங்கே ஏற்படுகிறது, எப்படி ஏற்படுகிறது என்றால், அடிப்படையிலேயே சர்டிபிகேட் வாங்கும்பொழுது மணியக்காரர்கள் சரிவரப் பரிசீலனை செய்யா மல் கையெழுத்துப் போடுவதும், அதன்பேரில் தாசில்தார் கையெழுத்துப் போடுவதுமான ஒரு தவறான சூழ்நிலை வழக்கமாக ஏற்பட்டிருக்கிறது என்பதை நான் மீண்டும், மீண்டும் இந்தச் சபையில் சொல்லியிருக் கிறேன். அவ்விதமான ஒரு சூழ்நிலை இனியும் ஏற்படாமல், பின்தங்கிய வகுப்பினரைச் சேர்ந்த மாணவர்கள் என்றால், எந்த நிலையில் உள்ளவர்கள், அவர்களுடைய பொருளாதார நிலை என்ன என்பதையெல்லாம் சரிவரப் பரிசீலனை செய்து, ஏழை பின்தங்கிய சமுதாயத்தாருக்கே போய்ச் சேர வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். அவ்வாறு சம்பளச் சலுகை கொடுப்பதற்கு பரிசீலனை செய்ய ஒரு தனிக் கமிட்டி நியமித்தால்கூட நன்றாக இருக்கும். அல்லது, சட்ட சபை அங்கத்தினர் களுக்காவது அந்த சர்டிபிகேட்டுகளை அனுப்பி, அந்த மாணவர்கள் உண்மையாகவே பிற்பட்ட வகுப்பினரைச் சேர்ந்தவர்களா, இல்லையா, என்று பரிசீலனை செய்யச் சொல்ல வேண்டும். அவ்வாறு செய்தால் சட்ட சபை மெம்பர்கள் இது விஷயத்தில் உண்மையைக் கண்டறிந்து சொல்லுவதற்குத் தயாராக இருக்கிறார்கள் என்பதை நான் இந்த சந்தர்ப் பத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தவறாக சம்பளச் சலுகையை ஏமாற்றிப் பெற்றிருந்தால் அவர்களிடமிருந்து மீண்டும் வாங்கிய தொகையை வாங்குவதோடு, தவறாக சர்டிபிகேட் கொடுத்தால் அவர்கள்மீது நட வடிக்கை எடுக்கலாம்.

அடுத்தபடியாக, வேலையில்லாத் திண்டாட்டம் இன்றைக்கு நமது நாட்டில் அதிகமாக இருந்து வருகிறது என்பதைப் பல பேர்களும், கீழ் சபையிலும் மேல்சபையிலும் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். நாம் அந்த வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்துத்தான் ஆக வேண்டும். 5-20 p.m.
அதற்காக எத்தனையோ தொழிற்சாலைகளிலும், சர்க்கார் உத்தியோகங் களிலும் கூட இடம் ஒதுக்கியிருக்கிறோம். இருந்தாலும், ஒரு மணி நேரத்தில் 1,600 பேர்கள் பிறக்கிறார்கள், 1,100 பேர்கள் இருக்கிறார்கள் என்றால், மக்கள் பெருக்கம் அதிகமாகத்தான் ஆகிக்கொண்டு வருகிறது என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள். அதிகமாக மக்கள் பெருகிக் கொண்டு போவதைத் தடுப்பதற்கும், வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கும் நாம் பெரு முயற்சி எடுத்துக்கொள்ளத்தான் வேண்டும். ஒரு நல்ல வழியைப் பின்பற்ற வேண்டும். இப்பொழுது உத்தியோகத்தில் இருப்பவர்கள் 55 வயது வரை என் நீடித்து இருக்க வேண்டுமென்று நான் கேட்கிறேன். அவர்கள் 18 அல்லது 25 வயதிலிருந்து சர்க்கார் உத்தியோகத்தில் இருந்துவருவது நாம் அறிந்த விஷயம். இருபத்தைந்து வருஷ காலம் வேலை செய்த பிறகு என் அவர்கள் ரிடையராகக் கூடாது என்பதுதான் என்னுடைய கோரிக்கை. அப்படி அவர்கள் 50-வது வயதில் வேலையை விட்டுப் போனால், தங்களுக்குத் தள்ளாத வயதில் ஓய்வு

எடுத்துக் கொள்ளலாம். அவர்களுக்குப் பதிலாக வேலையில்லாத் திண்டாட்டத்தில் அவதிப்படும் இளைஞர்கள் உத்தியோகத்திற்கு ஏராளமாக வர முடியும். அது நல்லதோர் திட்டமாக இருக்கும். ஆகவே ரிடையராகும் வயதை 55-லிருந்து 50-ஆகக் குறைக்க வேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

SRI V. V. RAMASWAMI : மந்திரிகளின் வயது ?

THE HON. SRI R. VENKATARAMAN : They get employment after 50 years.

* SRI M. ETHIRAJALU : இன்று நமது ராஜ்யத்தில் நியூஸ் பிரிண்டுக் காகிதம் அதிக விலை விற்பதற்குக் காரணம் தெரியவில்லை. சென்ற இரண்டு, மூன்று மாதங்களுக்கு முன்னதாக ஒரு ரீம் 17 ரூபாயாக இருந்தது, இன்றைக்கு 23 ரூபாயாக விற்பதற்குக் காரணம் தெரியவில்லை. கேட்டால் போதுமான இறக்குமதி கிடைக்கவில்லை என்று சொல்லுகிறார்கள். அதே மாதிரி போட்டோ எடுப்பதற்கு வேண்டிய பொருள்களின் விலையும் அதிகமாகியிருக்கிறது. அதற்கும் காரணம் தெரியவில்லை. கேட்டால், இறக்குமதி கிடைக்கவில்லை என்று புகார் சொல்லுகிறார்கள். இதனால் பேப்பர் வியாபாரிகள் பிளாக் மார்க்கெட்டில் கொள்ளை லாபம் அடிக்கிறார்கள். இதைத் தடுப்பதற்கு அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும். சாதாரணமாக இந்த விலை உயர்வினால் சிறு பத்திரிகைத் தொழில் நடத்துபவர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இந்த விலை உயர்வின் காரணத்தை அமைச்சர் அவர்கள் தங்கள் பதிலிலே சொல்ல வேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இந்த நாட்டில் எத்தனையோ ரகத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய வேலை முறை, ஓய்வு நேரம், வாழ்க்கை நிலை முதலியவைகள் இன்னும் சரியாக நம் ராஜ்யத்தில் கவனிக்கப்படவில்லை. ஹோட்டல் தொழிலாளர்களின் வாழ்க்கை நிலை உயர்வதற்காக, அவர்களுக்குச் சம்பள வசதி, லீவு வசதி, ஓய்வு நேரம், முதலியவைகளைச் செய்துகொடுப்பதற்காக நமது தொழில் அமைச்சர் சட்டம் கொண்டு வரப்போகிறார்கள். அதைப்போல பல தொழிலாளர்கள் இந்த ராஜ்யத்தில் இன்னும் இருக்கிறார்கள். அந்தத் தொழிலாளிகளின் நிலையை உயர்த்துவதற்கும், அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும் வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து கொடுக்க பெரு முயற்சி அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று நான் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். குறிப்பாக, சலவைத் தொழிலைச் செய்கின்ற தொழிலாளர்களின் வாழ்க்கை நிலையை உயர்த்தவேண்டுமென்று எத்தனையோ வருஷங்களாக இந்தச் சட்ட சபையில் கேட்டுக்கொண்டு வந்தும்கூட, இன்று வரை அரசாங்கம் கல்வியைத் தவிர வேறு எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்காதது கண்டு வருந்துகிறேன். சலவைத் தொழிலாளர்கள் முன்னேற சலவைத் துறைகள் கட்டிக்கொடுக்கும்படி கேட்கிறார்கள் என்ற எண்ணம் அடியோடு மாறவேண்டும். அது அவர்கள் தொழில் முன்னேற்றத்திற்கு அல்ல ; பொது மக்கள் சுகமாக, வியாதி பரவாமல் வாழ்வதற்கு என்பதை சர்க்கார் மறக்கக்கூடாது. பொது மக்கள் வியாதியின்றி வாழ வசதியாக இருக்கும் என்பதை நாட்டு மக்களும் சர்க்காரும் அறிய வேண்டுமென்பதை நான் இச்சபையில் தெரிவித்துக்கொள்கிறேன். மக்களுக்காக உழைக்கும் சலவைத் தொழிலாளர்களுடைய நிலை உயர்த்தப்படவேண்டுமென்று பல வருஷங்களாக நான் கெஞ்சிக் கேட்டும் பயனற்றதாகப்போய்விட்டது. இந்தக் கோரிக்கை எப்பொழுது தீருமோ தெரியவில்லை. நமது தொழிலமைச்சர் இருக்கும்பொழுதே இந்த விஷயத்தை நன்றாகப் பரிசீலனை செய்து ஆவன உடனடியாகச் செய்வார்கள் என்று நம்புகிறேன். அவர்கள் 20, 30 வருஷங்களாக ஒவ்வொரு குடும்பத்தாருக்கும் தொழில் செய்து கொடுத்துவிட்டு வயோதிக காலத்தில் தங்களுக்கு எந்தவிதமான பிரதி பிரயோஜனம் இல்லாமலும் தங்கள்

சந்ததிகளை நாட்டின் முன்னேற்றத்திற்கு ஏற்பக் கொண்டு செல்ல வழி யில்லாமலும் கடைசி காலத்தில் தவிக்க விட்டு அந்தக் குடும்பங்கள் இருக்கும் இடம் தெரியாமல் மறைந்துவிடுகின்றன. சலவைத் தொழிலாளர்களுடைய வாழ் நிலையை எண்ணிப் பார்க்கும் பொழுது உழைப்பவர்கள் மனம் கலங்காமல் இருக்க முடியவில்லை. அவர் கள் கூலியும் இதுவரை உயர்ந்தபாடில்லை. அவர்களுக்கு வீடு கட்டிக் கொடுப்பதாகச் சொல்லி அதுவும் ஏமாற்றப்பட்டது. ஆகவே, எல்லா வற்றையும் உடனடி கவனிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்தபடியாக இந்த வரவு செலவுத் திட்டத்தைத் தயாரித்த அறிவின் சிகரம் என்று சொல்லக்கூடிய நமது நிதி அமைச்சர் அவர்களையும் இந்த சபைத் தலைவரையும் அமைச்சர் குழுவையும் நான் பாராட்டுகிறேன். அரசாங்கம் நல்ல முறையில் நடக்க வேண்டும், நாட்டு மக்கள் அதில் பங்கு கொள்ள வேண்டுமென்ற உணர்ச்சியோடு இந்த வரவு செலவுத் திட்டத்தைத் தயா ரித்ததற்கு, குறிப்பாக காமராஜ் மந்திரி சபைக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri K. V. RAMASWAMY** : மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர் களுக்கும், மற்றுமுள்ள ஏனைய சகோதர சகோதரிகளுக்கும் என்னுடைய வணக்கம் உரித்தாகுக. இன்றைய தினம் நான் பேச ஆசைப்பட்டேன். ஆனால் இங்கு அதிகமாக நண்பர்கள் சபையில் இல்லாமல் இருப்பதுபற்றி நான் மிகவும் வருத்தத்தோடு பேசுகிறேன். நான் சில இடங்களிலே போய் பேசுவது உண்டு. இரவு மூன்று மணி, நான்கு மணிக்குக் கூட கூட்டங்கள் நடத்தியிருக்கிறேன். அந்த சந்தர்ப்பத்தில்கூட மக்கள் அந்த இடத்தி லேயே தரையிலே படுத்து எழுந்திருந்து பிரசங்கங்களைக் கேட்பதற்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள் என்று சொன்னால் அது மிகையாகாது. அந்த சந்தர்ப்பங்களில் பனியாக இருந்தாலும் சரி, மழை இருந்தாலும் கூட, அல்லது கோடை காலத்தில் வெய்யில் இருந்தாலும்கூட, சில இடங்களில் கூட்டங்கள் நடப்பது உண்டு. அதிலும் எலெக்ஷன் காலத்தில் இடைவிடாது இம்மாதிரி ஒவ்வொரு இடத்திலும் கூட்டம் நடப்பது உண்டு. மக்கள் காத்திருந்து பிரசங்கங்களைக் கேட்பது உண்டு. அந்தக் கூட்டங் களுக்கு வருபவர்களுக்குச் சம்பளம் கொடுப்பதில்லை, அல்லது வேறு 'பேட்டா' கொடுப்பதில்லை. ஆனால் நாம் அனைவரும் பொது மக்க ளுடைய பணத்தை சர்க்காரிடமிருந்து சம்பளமாகவும் 'பேட்டா' வாகவும் வாங்குகிறோம். இதை நாம் அனைவரும் மனதில் வைத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். அப்படி இருந்தும்கூட, இந்தக் கூட்டத்தில் 'கோரம்' இல்லாமல் போய்விடுமோ என்பதற்காக, 'அமருங்கள், அமருங்கள்' என்று சொல் லக்கூடிய நிலைமை ஏற்படுவதைப் பார்த்தால், மிகவும் வெட்கக்கேடாக இருக்கிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். ஏன் இங்கே நாம் வீற்றிருக்கிறோம் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். மக்களுக்காக நல்ல காரியங்களை நிறைவேற்றவேண்டுமென்பதற்காகத் தான் நாம் இங்கே விவாதங்கள் நடத்துகிறோம். அப்பேர்ப்பட்ட அரிய சந்தர்ப்பம் இது. மனித வாழ்க்கையில் கிடைக்கக்கூடிய நேரம் என்பது ஒரு மாணிக்கத்தைப் போன்றது. அதுவும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளாக இருப்பவர்களின் நேரம் பொறுக்கியெடுக்கப்பட்ட மாணிக் கத்தைப் போன்றது. அந்த நிலையில் நாம் அனைவரும் இங்கு வந்திருக் கிறோம் என்பதை மறந்துவிடக் கூடாது. அதை மனதில் வைத்துக்கொண்டு நல்ல காரியங்களை நிறைவேற்றவேண்டியது நமது கடமை. தேச பக்தர் களாக இருக்கக்கூடிய பல அங்கத்தினர்கள் நாம் இன்று சுதந்தரம் பெற்றுவிட்டதாக நினைக்கலாம். ஆனால் சுதந்திர நாட்டில் மக்கள் சுதந் திரமாக வாழ்வதற்கு வகை செய்யவேண்டியது நம்முடைய பெரிய கடமையாகும் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. நம் கடமையை நாம் முதலில் உணர வேண்டும். நாம் ஒவ்வொருவரும், அவரவர்களுடைய ஊர்களுக்கும், நம் நாட்டு மக்களுக்கும் என்ன செய்யவேண்டும் என்பதை அறிந்து கொண்டு, அவைகளைச் செய்வதற்கு ஆர்வம் கொள்ள வேண்டும். அதுதான் என் விருப்பம். ஆகவேதான் நம்மிடமுள்ள குறையை நான் முதலில் குறிப்பிட்டேன்.

[Sri K. V. Ramaswamy] [3rd March 1958

(Deputy Chairman in the Chair.)

நம் நாடு முன்னேறி, நம் நாட்டு மக்கள் நல்வாழ்வு வாழ வேண்டு மானல், நம் நாட்டில் எது மிகவும் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும் ? நம் நாட்டில் விவசாயம்தான் மிகவும் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும். நம் நாட்டில் விவசாயிகள்தான் மிகவும் முக்கியமானவர்கள். அவர்கள் தான் இந்த நாட்டை உய்விக்கிருர்கள். இந்த நாட்டில் இப்போது ரூ. 5,000, ரூ. 10,000 மாதச் சம்பளம் வாங்குபவர்களும் இருக்கிருர்கள் ; வயலில் உழைத்து நாள் ஒன்றுக்கு 4 அணு வீதம் கூலி பெறுபவர்களும் இருக்கிருர்கள். இப்படி நாள் ஒன்றுக்கு 4 அணு கூலி பெறும் விவசாயத் தொழிலாளி, தன் சிரமத்தையும், பசியையும் பார்க்காமல், தன் உழைப்பே உலகத்திற்கு மிகவும் அவசியம் என்ற உத்தமமான மனப்பான்மையுடன் வயலில் வெகு நேரம் உழைக்கிருன். அவனிடம் கடிகாரம் இருக்காது. 'வயலை விட்டு வெளியே செல்லலாமா ? காப்பி சாப்பிடலாமா ?' என்று அவன் நினைக்கமாட்டான். சில தொழிற்சாலைகளில் வேலை ஆரம்பிக்கும் நேரத்திலும் வேலை முடியும் நேரத்திலும் மணி அடிப்பது உண்டு. வயலில் மணி அடிக்கப்படுவதில்லை. 'மணி அடித்தாகி விட்டதா ? நாம் போகலாமா ?' என்று விவசாயி பார்க்கமாட்டான். மண்வெட்டியை எடுத்துக்கொண்டு வயலில் வேலை செய்ய ஆரம்பித்தால், அவன் வேலை செய்துகொண்டேயிருப்பான். அப்படி வயலில் வேலை செய்யும்போது, அவனுக்குத் தாகம் எடுத்தால் தண்ணீர் குடிப்பதற்காக அவன் கொஞ்ச தூரத்திலிருக்கும் கிணறு வரை செல்லமாட்டான். அப்படிச் சென்ருல் நேரம் வீணுகிவிடும் என்ற காரணத்தால், அவன் வயலுக்குச் செல்லும் போது ஒரு பானையில் தண்ணீர் எடுத்துக்கொண்டு செல்வான். தாக மெடுக்கும்போது அந்தத் தண்ணீரைக் குடிப்பான். தினம் 4 அணுக் கூலி பெறும் விவசாயத் தொழிலாளி அப்படி உழைக்கும்போது, ரூ. 150 மாதச் சம்பளமும் சபைக் கூட்டத்தின்போது சபைக்கு அவர்கள் வரும் ஒவ்வொரு தினத்திற்கும் ரூ. $12\frac{1}{2}$ படியும் பெறும் சட்ட சபை அங்கத்தினர்கள் சபையில் பெரும்பாலும் இருப்பதில்லை. கனம் அங்கத்தினர்கள் சபையின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமென்று நான் அவர்களைத் தாழ்மை யுடனும் பணிவுடனும் கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயத் தொழிலாளர்களின் கஷ்டங்களை நீக்க வேண்டியது சர்க் காரின் முதல் கடமை ஆகும். 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார், மற் றெல்லாம் தொழுதுகொண்டு பின்செல்பவர்' என்று சொல்லப்பட்டிருக் கிறது. உழவர்களுக்கு அவ்வளவு மதிப்பை நம் முன்னேர்கள் கொடுத் திருந்தார்கள். காங்கிரஸ் சர்க்கார் விவசாயிகளுக்குப் பல நன்மைகளைச் செய்திருக்கிறது. முதலில், விவசாயிகளின் கடன் பளுவை மிகவும் குறைத்திருக்கிருர்கள் ; அதற்காகக் கடன் நிவாரணச் சட்டம் கொண்டு வந்திருக்கிருர்கள். மேலும், விவசாயக் காரியங்களுக்காகக் கிணறுகள்
5-30 p.m. வெட்டுவதற்கு அரசாங்கத்தார் கடன்கள் கொடுத்திருக்கிருர்கள். மழை பெய்யாத இடங்களில் பல சமயங்களில் வரி வஜா செய்யப்பட்டிருக்கிறது. இவ்வளவு காரியங்களை சர்க்கார் செய்தாலும் விவசாயிகள் அவைகளால் பூரணமாகப் பயனடைய முடியவில்லை. விவசாயிகளுக்கு சர்க்கார் கடன் கொடுக்கும் விஷயத்தில், கிராமக் கர்ணமிடமிருந்தோ மணியக்காரரிட மிருந்தோ விண்ணப்பத்தில் கையெழுத்து வாங்கி வந்தால்தான், விவ சாயிகளுக்கு உத்தியோகஸ்தர்கள் கடன் கொடுக்கிருர்கள். இதன் காரண மாகக் கடன் வாங்கும்போது, பல விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். கடன் வாங்கும்போது விவசாயிகள் பலருக்குக் கமிஷன் கொடுக்க வேண்டி யிருக்கிறது. விவசாயி நூறு ரூபாய் கடன் வாங்க வேண்டுமானல், அவன் கமிஷனுக்காக 15 ரூபாய் செலவழிக்க வேண்டியிருக்கிறது. இந்தக் கமிஷனில் யார் யாருக்குப் பங்கு உண்டு என்பது வேறு விஷயம். எப்படியோ ரூ. 15 அவன் கையைவிட்டுப் போய்விடும். இந்த நிலைமை மாற வேண்டும். இது சம்பந்தமாக, அவசியமான எச்சரிக்கை உத்தரவு களைத் தாசில்தார்களுக்கும் கிராம அதிகாரிகளுக்கும் சர்க்கார் அனுப்ப வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும், கடனை வாங்கி வரும் போது விவசாயிகள் பலர் அதைப் பறிகொடுத்து விடுகிருர்கள். தாலுகா ஆபீசிற்குச் சென்று கடன் தொகையைப் பெற்றுக்கொண்டு, ரயிலிலோ

3rd March 1958] [Sri K. V. Ramaswamy]

பஸ்ஸிலோ தங்கள் கிராமத்திற்கு வந்து சேருகிறார்கள். அப்படி வரும் போது அவர்கள் பணத்தைப் பறிகொடுத்து விடுகிறார்கள் ; யாரோ அதைத் திருடிவிடுகிறார்கள் ; பிறகு வீட்டிற்கு வந்த பிறகுதான் தங்கள் பை காலியாக இருப்பதை அவர்கள் பார்க்கிறார்கள். இந்த நிலைமையும் மாற வேண்டும்.

அடுத்தபடியாக, நில அடமான பாங்குகளைப்பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நில அடமான பாங்குகளிலிருந்து விவசாயிகள் கடன்களைக் காலா காலத்தில் பெற முடிவதில்லை. ' கலியாணத்திற்குப் பணம் கேட்டால் கருமாதிக்குப் பணம் கிடைக்கிறது ' என்று சொல்வதுண்டு. அந்த மாதிரி நில அடமான பாங்கிலிருந்து விவசாயிக்குக் கடன் வெகு தாமதமாகக் கிடைக்கிறது. நில அடமான பாங்குக்காரர்கள், கடன் கேட்கும் விவசாயிகளிடம் பல பழைய காலத்து தஸ்தாவேஜுகளைக் கேட்கிறார்கள். இவைகளை விவசாயிகள் எளிதில் தேடிக் கொடுக்க முடிவதில்லை. பலர் இவைகளைக் கொடுக்கவே முடிவதில்லை. இதன் காரணமாக விவசாயிகள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, விவசாயிகளுக்குக் காலா காலத்தில் நில அடமான பாங்குகளிலிருந்து கடன் கிடைக்கக்கூடிய வகையில் விதிகளைத் தளர்த்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். குடியானவர்களுக்குச் சில நன்மைகளை சர்க்கார் செய்திருக்கிறார்கள். இன்னும் என்ன நன்மைகளை அவர்களுக்கு சர்க்கார் செய்ய வேண்டுமென்பதைப்பற்றிப் பின்னர் சொல்கிறேன்.

அடுத்தபடியாக, விவசாயிகளினால் சர்க்காருக்கு என்ன லாபம் என்பது கேள்வி. விவசாயிகள் சர்க்காருக்குக் கந்தாயம் கொடுக்கிறார்கள். அவர்கள் கிஸ்தி கொடுப்பதை எக்காரணத்தைக் கொண்டும் நிறுத்த முடியாது. அவர்களிடமிருந்து கிஸ்தியை அவசியம் வாங்கியே தீருகிறோம். இரண்டாவதாக, விவசாயிகள் தானியத்தையும், மற்ற விளைபொருள்களையும் பயிர் செய்கிறார்கள். நான் கவர்னர் பேருரையின் மீது விவாதம் நடந்தபோது, புகையிலைப் பயிரைப்பற்றிப் பேசியது எல்லோருக்கும் ஞாபகம் இருக்கும் என்று எண்ணுகிறேன். புகையிலையைப் பயிர் செய்வதால் என்ன லாபம் என்பதுபற்றி உங்களுக்குச் சொல்ல ஆசைப்படுகிறேன். புகையிலைக்கும், சர்க்காருக்கும் என்ன சம்பந்தம் என்று நீங்கள் நினைக்கலாம். ஒரு ஏக்கரில் புகையிலை விவசாயம் செய்தால், 15 மூட்டையிலிருந்து 30 மூட்டை வரையில் புகையிலை எடுக்கலாம். இதைக் குழிப் புகையிலை என்று சொல்லுவார்கள். வரப்புப் புகையிலை என்பது வேறு. குழிப் புகையிலைக்கு ராத்தல் ஒன்றுக்கு 8 அணா வரி. ஒரு மூட்டைக்கு 80 ராத்தல். சராசரியாகப் பார்க்கும்பொழுது ஒரு ஏக்கருக்கு 22 மூட்டை புகையிலை கிடைக்கலாம். ஆக, 1,700 ராத்தலுக்கு மொத்தம் 880 ரூபாய் வரி கொடுக்கிறார்கள். ஒரு ஏக்கர் நிலத்தில் மூன்று மாதம் விவசாயம் செய்யக்கூடிய ஒரு விவசாயி புகையிலைப் பயிருக்காக 880 ரூபாய் நம் சர்க்காருக்கு வரியாகக் கொடுக்க வேண்டுமென்பதை நான் இந்த சபையிலே தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். இவ்வளவு வரி ஒரு லட்சாதிபதி கூடக் கொடுக்கிறானா என்பது அடுத்த கேள்வி. அப்படி வரி கொடுக்கக்கூடிய குடியானவனுக்கு நாம் என்ன செய்துகொண்டிருக்கிறோம் ? அவர்களுக்கு என்ன சலுகைகள் செய்து கொடுக்கிறோம் 5-40
என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டிய நிலையிலே நாம் இருக்கிறோம். p.m.
அப்படியிருக்கக்கூடிய குடியானவனுக்கு என்ன கஷ்டம் ஏற்படுகிறது என்றால் தன்னுடைய நிலத்திற்கு மண், எரு போன்றவைகளைக் குளங்களிலிருந்து எடுத்துச் செல்லுவதற்குப் போதுமான ரோடு வசதி கிடையாது. அந்த ரோட்டில் போகும்பொழுது ஒரு சக்கரம் மேலும், மற்றொன்று கீழுமாக இருக்கும். மேட்டில் ஏறும்பொழுது மாட்டின் கழுத்து வீங்கிக்கொண்டு விடுகிறது. இம்மாதிரியான பல உபத்திரவங்கள் குடியானவனுக்கு ஏற்படுகின்றன. இந்தக் கழுத்து வீங்கியிருக்கும் மாட்டை ஓட்டிக்கொண்டு சந்தைக்குப் போனால், அங்கே எமதர்மராஜன் மாதிரி எஸ்.பி.ஸி.ஏ. இன்ஸ்பெக்டர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இந்த விவசாயியின் மாட்டைப் பார்த்தவுடன் ' நிறுத்து ' என்கிறார்கள். உடனே விவசாயி ' எஜமான், ஒன்றுமில்லை என் கழுத்திலே ! ' என்று சொல்லுகிறான் ' மாட்டின் கழுத்திலே ' என்பதற்குப் பதிலாக. இது ரொம்பப் பரிதாபகரமாக

[Sri K. V. Ramaswamy] [3rd March 1958

இருக்கிறது. அவர்கள் ஏதாவது ஜேப்பில் இருந்தால் தான் பிழைக்கலாம். விவசாயி, 'இப்பொழுதுதான் வருகிறேன், சந்தையில் விற்றுத்தான் கொடுக்கவேண்டும்' என்று சொல்லுகிறன். அவர்கள் அப்படிக் காசு கொடுக்காவிட்டால், தாலூகா கோர்ட்டுக்கு 4 தடவை அவர்களை அலையச் செய்து அபராதம் போடுகிருர்கள். காசு கொடுத்து விட்டால், மாட்டிற்குக் கழுத்தில் ஒன்றுமில்லை, புண்ணுமில்லை, தார்க்கோலுமில்லை. ஒன்றும் கொடுக்காவிட்டால், மாட்டின் கழுத்தில் வீக்கம், கழுத்தில் புண், தார்க்கோல் போட்டது எல்லாம் வந்துவிடும். இந்தச் சூழ்நிலையை இனிமேல் சகித்துக்கொண்டிருக்க முடியாது. ஐந்நூறு, 1,000 ரூபாய் கொடுத்து வாங்கிய மாட்டை அந்த விவசாயியே பாதுகாத்துக்கொள்ளு வான். அதற்காக அவன்பேரில் குற்றம் கண்டுபிடித்து தண்டனை கொடுப்பது ரொம்பவும் மோசமாக இருக்கிறது. என்னுடைய வேண்டுகோள் என்ன வென்ருல், இந்த டிபார்ட்மெண்டையே அறவே ஒழிக்க வேண்டும், இதை நீடிக்கவிடக் கூடாது என்பது தான். இதற்கு வேண்டிய ஏற்பாடு களை அரசாங்கம் செய்யவேண்டுமென்று மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, விவசாயிகளுடைய குறை கரண்டு பற்றியது. இது ரொம்பவும் முக்கியமானது. அது சம்பந்தப்பட்ட மந்திரி அவர்கள் இங்கே இருந்தார்கள். இப்பொழுது அவர் வெளியே போயிருக்கிருர் என்று நினைக்கிறேன். கரண்டு குடியானவர்களுக்கு இன்றியமையாத விஷயம். ஆரம்ப காலத்தில் பம்புசெட்டு வைப்பதற்கு வேண்டிய பணத்தை சர்க் காரே கடனுகக் கொடுத்து உதவினுர்கள். பிற்பாடு 'வரவர மாமியார் கழுதை போல் ஆனுள்' என்று சொல்லுவது போல நிலைமை மோச மாகிவிட்டது. கரண்டு உபயோகப்படுத்தினுலும், உபயோகப்படுத்தாவிட்டாலும் இத்தனை வருடங்களுக்கு என்று ஒப்பந்தம் வாங்கப்படுகிறது. ஒரு ஹார்ஸ் பவருக்கு இத்தனை என்று கணக்குப் போட்டு அதை முதலிலேயே குடி யானவர் தலையில் வைத்து அழுத்துகிருர்கள். குடியானவன் பயிர் காய் கிறதே என்ற கவலையினுல், நீட்டிய இடத்தில் கையெழுத்துப் போட்டு விடுகிருன். 'சுப்பையா கவுண்டர், மாரி கவுண்டர்' என்று பேரைக் கூப்பிட்டவுடன் கரண்டு வேண்டுமென்ற ஆவலினுல் கையெழுத்துப்போட்டு விடுகிருன். இம்மாதிரியான சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக கரெண்டு கனெக்ஷன் கொடுத்து பம்புசெட்டை மாட்டு வதற்கு, அதற்கான பரீக்ஷை பாஸ் செய்து செர்டிபிகேட் வாங்கியிருப்பவர் கள்தான் அந்த வேலையைச் செய்யவேண்டும் என்று சர்க்கார் புதியதாக விதி போட்டிருக்கிருர்கள். இதுபற்றிக் குடியானவனுக்கு ஒன்றுமே தெரியாது. அதனுல் சர்க்கார் தனக்குப் பாதகம் செய்கிருர்கள் என்ற மனப்பான்மை தான் அவன் உள்ளத்தில் வளர்ந்துவருகிறதே தவிர, சர்க்கார் தனக்கு ஒன்றும் சலுகை செய்ததாக அவன் உள்ளத்திலே உணர்ச்சி ஏற்பட வில்லை. யுத்த காலத்தில்தான் இந்த சர்சார்ஜ் போடப்பட்டிருந்தது. இன்னும் கூட அந்த சர்சார்ஜ் போடவேண்டுமா என்று நான் கேட்கி றேன். மக்கள் 'நீங்கள் தான் எம்.எல்.ஸி. ஆக ஆகிவிட்டீர்களே, இந்தக் குறைகளை எடுத்துச் சொல்லக்கூடாதா' என்று என்னைக் கேட் கிருர்கள். ஆகவே, அவர்களுடைய குறைகளை இந்தச் சபையில் எடுத்துச் சொல்ல முன்வந்துள்ளேன். அதே மாதிரி அந்த மக்களிடம் போய் 'நீங்கள் சொன்ன குறைகளை சபையில் எடுத்துச் சொல்லிவிட்டேன்' என்று தெரிவித்த பிறகு தான் நான் வீட்டிற்குப் போவேன். இந்தத் தொல்லைகளை நீக்கவேண்டும். யார் வேண்டுமானுலும் பம்பு செட்டை நிறுவுவதற்கும், தகுதியுள்ள ஒருவர் அதை 'செர்டிபை' பண்ணுவதற்கும் இடமளிக்கும் வகையில் விதி வகுக்க வேண்டும். இப் போது இருக்கும் முறை சரியாக அமல் நடக்கவில்லை. சம்பந்தப்பட்ட பத்திரத்தில் கையெழுத்துப்போடும் உத்தியோகஸ்தர், எந்தத் தோட்டத் தில் கிணறு இருக்கிறது என்றும், எங்கே யார் பம்புசெட்டை நிறுவுகிருர் என்றும் பார்ப்பதில்லை. அவர் எங்கேயோ இருந்துகொண்டு கையெழுத் துப்போட்டு விடுகிருர். நாம் இவ்வளவையும் பார்த்துக்கொண்டு சகித்துக் கொண்டிருக்கிறேம். வெள்ளைக்காரர்கள் காலத்தில் உத்தியோகஸ்தர்கள் செய்த அக்கிரமங்களை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்த நாம் இன்று இப் பேர்ப்பட்டவர்களை விட்டுவைத்திருக்கிறேம்.

3rd March 1958] [Sri K. V. Ramaswamy]

நாம் முக்கியமாகச் செய்யவேண்டியது லஞ்ச ஊழல்களைத் தகர்த்தெறிய வேண்டியது ஆகும். தெரிந்தே அதை நாம் நீடிக்க விடுவது மிகவும் மோசமானது. நாம் தாலுகா ஆபீசுக்குச் செல்லும் போது அங்கே நம்மிடம் யாராவது லஞ்சம் கேட்டால், லஞ்சம் கொடுப்பது மிகவும் மோசமானது. லஞ்ச ஊழலை அறவே தகர்த்தெறிவதற்கு அரசாங்கத்தார் கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டும். லஞ்ச ஊழலை அரசாங்கத்தார் ஒழிப்பதற்கு அவர்களுடன் நாம் ஒத்துழைக்க வேண்டும். எல்லா இலாகாக்களிலும் லஞ்சம் வாங்கும் உத்தியோகஸ்தர்கள் இருக்கிறார்கள். ஆஸ்பத்திரிகளிலுள்ள ஊழியர்கள் லஞ்சம் வாங்குகிறார்கள். எங்கள் ஊர் ஆஸ்பத்திரிகள் மோசமாக இருக்கின்றன. சென்னை நகரத்திலுள்ள பெரிய ஆஸ்பத்திரி நன்றாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் உண்மையில் அப்படி இல்லை என்பதைத் தெரிந்துகொண்டேன். சென்னையிலுள்ள பெரிய ஆஸ்பத்திரியில் என் நண்பர் ஒருவர் சிகிச்சைக்கு அனுமதிக்கப்பட்டிருந்தார். அவரைப் பார்க்கச் சென்றிருந்தேன். அவரைப் பார்க்கப்போனபோது, அந்த ஆஸ்பத்திரியில் உள்ள எல்லா நிலைமைகளையும் தெரிந்துகொள்ள விரும்பினேன். என் நண்பரின் பக்கத்திலிருந்த நோயாளியிடம் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தேன. டாக்டர்களும் மற்ற ஊழியர்களும் அவரை நன்றாகக் கவனிக்கிறார்களா என்று அவரிடம் கேட்டேன். "டாக்டர்கள் நன்றாகத் தான் கவனிக்கிறார்கள். அவர்கள் தினந்தோறும் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்கு வந்து நோயாளிகளைப் பார்த்துவிட்டுப் போய்விடுகிறார்கள். மற்ற சமயங்களில் எங்களை இங்கேயுள்ள சிப்பந்திகள்தான் கவனிக்க வேண்டும். அவர்கள் சரியாகக் கவனிப்பதில்லை. இன்றைக்கு எங்களுக்குக் கொடுக்கப்பட்ட சோறு வேகவேயில்லை" என்று சொன்னார். அப்போது அவர் பக்கத்திலிருந்த ஒருவன் சோறு 'கடுமுடு' கடுமுடு' என்று இருந்தது என்றான். 'ஏன்' என்று நான் கேட்டேன். 'சோறெல்லாம் ஒரே கல்லாக இருந்தது. கல் வேகவில்லை' என்று அவன் சொன்னான். அப்போது அவன் பக்கத்திலிருந்த இன்னொருவன் 'உங்கள் ஊர் எந்த ஊர் ?' என்று என்னைக் கேட்டான். நான் என் ஊரின் பெயரைச் சொன்னேன். உடனே அவன் 'கோயம்புத்தூர் தண்ணீர் நல்ல தண்ணீர் போல் இருக்கிறது. அந்தத் தண்ணீரில் கல் வேகும்போல் இருக்கிறது. மெட்றாஸ் தண்ணீரில் கல் வேகவில்லை' என்று அவன் சொன்னான். (சிரிப்பு). அதற்குப் பிறகு ஒரு நோயாளியிடம் சென்றேன். அவருக்குத் தமிழ் தெரியாது. எனக்கு ஆங்கிலம் தெரியுமா என்று என்னை அவர் கேட்டார். 'ஏதோ கொஞ்சம் அரைகுறையாகத் தெரியும். நீங்கள் ஆங்கிலத்தில் பேசுங்கள்' என்று நான் சொன்னேன். அப்போது அவர் "இங்குள்ள டாக்டர்களைப்பற்றிக் குறை சொல்வதற்கில்லை. கீழ் சிப்பந்திகள் செய்யும் கொடுமைதான் சொல்லி முடியாது. கக்கூசுக்கே போக முடிவதில்லை. கக்கூஸ் அவ்வளவு ஆபாசமாக இருக்கிறது. நீங்களே பாருங்கள்." என்று சொன்னார். நானும் கக்கூசுக்குச் சென்றேன். அங்கே நம் தோட்டி சகோதரர்கள் ஜாலியாக சிகரெட் பிடித்துக்கொண்டிருந்தார்கள். கக்கூஸ் மிகவும் ஆபாசமாக இருந்தது. பிறகு மற்றொரு நோயாளியிடம் சென்று பேசிக்கொண்டிருந்தேன். அவர் "நான் ஒன்றுக்குப் போகக்கூட முடிவதில்லை ; ஒன்றுக்குப் போவதற்கான தகரத்தை இங்குள்ள ஊழியர்கள் கொண்டுவந்து கொடுப்பதில்லை. அவர்களுக்கு அடிக்கடி பணம் கொடுத்துக் கொண்டிருந்தால், எங்களைக் கவனிக்கிறார்கள் ; இல்லாவிட்டால் கவனிப்பதில்லை. என் ஊர் 200 மைலுக்கு அப்பால் இருக்கிறது. அங்கேயிருந்து இங்கே வந்திருக்கிறேன். இந்த ஆஸ்பத்திரியில் மிகவும் கஷ்டப்படுகிறேன்" என்று சொன்னார். டாக்டர்கள் தங்களை நன்றாகக் கவனிக்கிறார்கள் என்றும் கீழ் சிப்பந்திகள் தான் தங்களைக் கவனிப்பதில்லை என்றும் எல்லோரும் அந்த ஆஸ்பத்திரியில் சொன்னார்கள். கீழ் சிப்பந்திகள் அவர்களுடைய கடமையைச் சரிவரச் செய்கிறார்களா என்று மேலதிகாரிகள் பார்க்க வேண்டும். ஆஸ்பத்திரிக்குப் பெருமையைத் தேடுவதற்காக, கீழ் சிப்பந்திகளைக் கவனித்து புத்திமதிகள் கூறி மேலதிகாரிகள் அவர்களை ஊக்குவித்தால், அவர்களும் தங்கள் கடமையைச் சரிவரச் செய்வார்கள் என்பதுதான் என் தாழ்மையான அபிப்பிராயம்.

5-50 p.m.

[Sri K. V. Ramaswamy] [3rd March 1958

விவசாயிகளின் நிலைமையைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தேன். விவசாயிகளின் நலனுக்காக இன்னும் என்ன காரியங்களைச் சர்க்கார் செய்யவேண்டும் ? இது சம்பந்தமாக, எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர்கள் ரொம்ப அழகாகப் பேசினார்கள். எங்கள் ஜில்லாவில் நிறைய மில்கள் தோன்றிவிட்டதால், பல விவசாயிகள் மில் தொழிலாளர் களாக ஆகிவிட்டனர். விவசாயத் தொழிலில் ஈடுபடுவதை அவர்கள் கேவலமாக நினைக்கிறார்கள். 'மண்வெட்டியை எடுத்து மண்வெட்டுவதா !' என்று அவர்கள் நினைக்கிறார்கள். விவசாயி ஒரு பெரிய பாட்டாளி. அவன் அதிகாலையில் எழுந்திருப்பான். அதிகாலையில் எழுந்திருக்க வேண்டுமானால் நமக்கு 'அலாரம்' வேண்டும். அதிகாலையில் எழுந்து ரெயிலுக்குப் போக வேண்டியிருந்தால், நாம் கடிகாரத்தின் அலாரத்தைத் திருப்பி வைத்துவிடுவோம். ஆனால் கிராமத்தில் விவசாயிக்கு 'கொக்கரக்கோ, கொக்கரக்கோ' என்ற அலாரம்தான் இருக்கும். அது என்றும் அதிகாலையில் தவறாமல் ஒலிக்கும். அப்படிச் சத்தம் போடும் கோழிக்கு கடிகாரத்திற்குச் சாவி கொடுப்பது போல் சாவி கொடுக்க வேண்டாம். அது விவசாயியை அதிகாலையில் தினந்தோறும் எழுப்பி விட்டுவிடும். அதற்காகத்தான் அவன் கோழி வளர்க்கிறான். அவன் அதிகாலையில் எழுந்து வயலுக்குச் சென்று விவசாய வேலைகளைச் செய்வான். அப்படிப் பாடுபடும் விவசாயி அந்த அந்தக் காலத்தில் அந்த அந்த விவசாய வேலைகளைச் செய்ய வேண்டும். அவன் நேரத்தைக் கணக்குப் பார்த்துக்கொண்டு, சில கட்டங்களில் வேலையை நிறுத்திவிட்டால் விவசாயத்தில் சரியான பலனை அடைய முடியாது. உதாரணமாக, புகையிலையைப் பதத்தோடு இருக்கும்போது அறுவடை செய்தால்தான் நல்லது ; இல்லாவிட்டால், புகையிலை பூராவும் பிரயோஜனமற்றதாகி விடும். ஆகவே விவசாயத் தொழிலாளிக்கு வேலை நேரத்தை நிர்ணயிக்க முடியாது. ஹோட்டல் தொழிலாளர்களின் வேலை நேரம் நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. இன்னும் வேறு பல தொழிலாளர்களின் வேலை நேரம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதேமாதிரி க்ஷவரத் தொழிலாளியின் வேலை நேரம் நிர்ணயிக்கப்பட்டுவிட்டால், க்ஷவரம் செய்துகொள்ளப் போகிறவர்கள் திண்டாட வேண்டியதுதான் ; பாதி க்ஷவரம் செய்துவிட்டு தன் வேலையை க்ஷவரத் தொழிலாளி நிறுத்திவிட்டால் க்ஷவரம் செய்து கொள்ளச் சென்றவர் திண்டாட வேண்டியதுதான். (சிரிப்பு). இப்படிப்பட்ட தொழிலாளர்களின் வேலை நேரத்தை நிர்ணயிக்க முடியாது. விவசாயத் தொழிலாளர்களின் வேலை நேரத்தை நிர்ணயிக்கமுடியாது. மில் தொழிலாளியின் வேலை நேரத்தை நிர்ணயித்திருக்கிறார்கள். வேலை ஆரம்ப நேரத்திற்கான மணி அடிக்கப்பட்டவுடன், மில் தொழிலாளி வேலைக்கு வருகிறான். வேலை முடியும் நேரத்திற்கான மணி அடிக்கப்பட்டவுடன், அவன் வீடு திரும்புகிறான். விவசாயத் தொழிலாளியின் வேலை நேரம் நிர்ணயிக்கப்பட்டால், விவசாயம் பாதிக்கப்படும். விவசாயத் தொழிலாளி மணிக் கணக்குப் பார்ப்பதில்லை. அவன் அப்போதைக்கப்போது அந்த அந்த வேலைகளைச் செய்கிறான். குளங்களிலிருந்து நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்ச ஆரம்பித்தால், அவன் எல்லா நிலங்களுக்கும் தண்ணீர் பாய்ச்சிவிட்டுத் தான் வீடு திரும்புகிறான். சில நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சிவிட்டுத் திரும்பினால் விவசாயம் சரிவர நடக்காது. அதேமாதிரி நடவு நடக்கும்போதும், நேரமாகிவிட்டால் அவன் வேலையைப் பாதியில் நிறுத்துவதில்லை. சிறிது நேரமானாலும் நடவு நடும் வேலையை முழுவதும் செய்துவிட்டுத்தான் வீடு திரும்புகிறான். விவசாயக் கூலி வேலைக்கு வரும்போதும் ஏதோ ஏறத்தாழ வருவான். ஆனால் வேலையைக் கடைசி வரையில் செய்துவிட்டுத்தான் வீட்டுக்குப் போவான். 'நாளைக்கு எப்போது வேலைக்கு வருவாய் ?' என்று விவசாயக் கூலியிடம் கேட்டால் 'பழைய சோற்று நேரத்திற்கு வருவேன்' என்று சொல்வான். பழைய சோற்று நேரம் என்பது காலை $7\frac{1}{2}$ மணி முதல் $10\frac{1}{2}$ மணி வரையுள்ள நேரம். பத்தரை மணிக்கு மேல்தான் 'சுடுசாத நேரம்' வருகிறது. விவசாயக்கூலி வேலைக்கு ஏறத்தாழ வருவான். அவன் வேலைக்கு வரும் வழியில் அவன் வீட்டுக்கு வரும் பந்துக்களைச் சந்தித்தால் அவர்களைத் தன் வீட்டிற்குக் கொண்டுபோய் அவர்களை உபசரித்துவிட்டு வேலைக்கு வரலாம் ; அப்படி ஏறத்தாழ அவன் வேலைக்கு வரலாம். அப்படி அவன் தாமதித்து வேலைக்கு வந்தால் அதற்காக அவனுக்கு அபராதம்

3rd March 1958] [Sri K. V. Ramaswamy]

போடப்படமாட்டாது. விவசாயத் தொழிலாளிக்கும், மற்றத் தொழிலாளி களுக்கும் வித்தியாசம் என்னவென்றால், விவசாயி நிலத்தில் இருக்கும் காய் கறி, விறகு இவைகளைச் சுதந்திரமாக எடுத்துக்கொள்ளுவான். செடியில் தக்காளிப் பழம் இருந்தால், அதைச் சுதந்திரமாகப் பரித்துச் சாப்பிடு வான். ஆனால் ஆபீசில் வேலை செய்யக்கூடிய தொழிலாளிகளுக்கு எங் கிருந்து விறகு கிடைக்கும், காய்கறி கிடைக்கும் ? செக்ரடேரியட்டில் வேலை செய்பவர்களுக்குக் காகிதம்தான் கிடைக்கும். காகிதத்தை வேண்டுமானால் சாப்பிடலாம். அதைத் தவிர வேறு ஒன்றையும் சாப்பிட முடியாது.

**Sri V. V. RAMASWAMI** : கான்டீனில் சாப்பிடலாம்.

* **Sri K. V. RAMASWAMY** : அங்கே காசு கொடுத்தால்தான் சாப்பிட லாம். மேலும் நடந்து போகவேண்டிய சிரமம் இருக்கிறது.

நான் முன்னால் பேசியபடி கரண்டு விஷயத்திலே ரொம்பவும் சொல்ல வேண்டியிருக்கிறது.

**DEPUTY CHAIRMAN** : இன்னும் 2 நிமிஷங்கள் தான் இருக்கின்றன.

* **Sri K. V. RAMASWAMY** : இந்த விஷயத்தை நாம் ஆராய்ந்து பூர்த்து அதற்கு ஆவன செய்வது நமது முக்கியமான கடமை. லஞ் சத்தை ஒழிப்பதில் சர்க்கார், சபை அங்கத்தினர்கள் எல்லோரும் ஒத் துழைக்கவேண்டும். இன்னும் எனக்கு இரண்டு நிமிஷங்கள் தான் இருக் கின்றன என்று சொன்னார்கள். நான் அதில் ஒரு நிமிஷத்தை மிச்சப் படுத்தி என்னுடைய பேச்சை முடித்துக்கொண்டால், மறுமுறை எனக்கு ஒரு நிமிஷம் கூடுதலாகப் பேசுவதற்கு அனுமதிப்பார் என்று நினைக்கி றேன். இவ்வளவு நேரம் பேசுவதற்கு எனக்கு உரிமை கொடுத்ததற் காகவும், என்னுடைய பேச்சைக் கொஞ்சம் பேர்களேனும் அமைதியோடும் ஆர்வத்தோடும் கேட்டதற்காகவும் என்னுடைய வணக்கத்தைச் செலுத் திக்கொண்டு, என்னுடைய அபிப்பிராயங்களைத் தீர்க்கமாக ஆலோசித்துக் கடமைகளை நிறைவேற்றுவதற்கு என்னுடன் சேர்ந்து எல்லோரும் ஒத் துழைக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித் துக்கொள்ளுகிறேன். ஜெய் ஹிந்த் !

DEPUTY CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. tomorrow.

The House then adjourned.

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 87. *Notification issued with G.O. Ms. No. 4777, Revenue, dated 28th December 1957, regarding amendments to the Madras General Sales Tax Rules, 1939.*

* 88. *A short review of the activities of the certified school for the half-year ended 30th June 1957.*

* 89. *Notification issued with G.O. No. 4559, Revenue, dated 10th December 1957, regarding amendments to the Madras General Sales Tax (Turnover and Assessment) Rules, 1939.*

* 90. *Notification issued with G.O. Press No. 4560, Revenue, dated 10th December 1957, regarding amendments to the Madras General Sales Tax (Turnover and Assessment) Rules and the Madras General Sales Tax Rules, 1939.*

* 91. *Notification issued with G.O. No. 4504, Revenue, dated 4th December 1957, regarding amendments to the Madras General Sales Tax (Turnover and Assessment) Rules, 1939.*

* Laid on the table of the House on 1st March 1958.